## திருவதிட்டத்துறைப்படலம்.

கடையுகத்தின் கதையிதென வதிசயித்துக் காவலன்முன் கழறக் கேட்டே, யிடையிலுள சதுர்யுகங்க ளீரேழு கடந்ததென் விறைமாழாந்து, புடையிலுள தலப்பெருமை புகலுமெனப் பொன்னடியைப் போற்றி நிற்க, மடைதிறந்த வெள்ளமென மாமுனிவன் புகலலுற்றான் மன்ன னுக்கே. (௧)

இப்பதியின் மேற்குளது வதிட்டகுடி யெனறிசைப்பாரெவரும் பாரில், செப்புதல மதற்குவமை செகதலத்தி னிலையென்பார் சீராய்க்கேட்டுத், தப்புடைக்கும் வேங்கைவனத் தரணிபனுப் பின்னகரந் தன்னைக்கண்டான், ஒப்பிகந்த வசிட்டமுனியுறைந்திருக்கு மதிசயத்தை யுரைக்கக்கேளாய். (௨)

வேறு.

முன்னொநா ளயன்றன் படைத்தகா லத்தி னூர்வசி யெனும்பெயர் மொழியுங், கன்னிதன் னெழிலாள் கலைவலா ளவளைக்கலந்திடக் கருதலுங் கருத்தில், உன்னிஞ னனலும் வயிற்றிடைவதிட்ட னூர்வசி சுதனென் வுதித்தான், மன்றுநான் மறைதேர் மலர்மகன் மேலா மரபினை நினைந்து நைந் தாற்றான். (௩)

அன்னத்தைக் கண்ட வன்னவா கனனு மருஞ்சுதன் கட்புனலகல, முன்னொநாளாக வேங்கைமா வனத்தில் முதல்வனும் வைத்திய நாதன், நன்னதி சுவேத நதிக்கரை யுறைந்தா னயந்துநீயவன்றனை நாடிச், சொன்னதோர் முறையின் படிபணிந்தபர்வைத் தொலைத்தருள் பெறுகெனச் சொற்றான். (௪)

ஆங்கது கேட்ட வழகிய வசிட்ட னுங்கதே கருமமென் றடைந்தான், பூங்கணை யானை வென்றதோர் முனிவன் புகலருந் தவத்தினைப் புரிந்தே, யோங்கரன் றனை யாகமப் படியே பூசனை தேர்த்திர முனுற்ற, வீங்குனைப் புகழ்ந்தே னின்னைப்போ லன்பரெவருளா ரென்னிறை யிசைத்தான். (௫)

சங்கரன் மொழியக் கேட்டபின் வசிட்டன் கசிந்துளங் களித்தினி திருந்தா, னங்கவன் றனக்கன் பராகிய தவத்தோரனேகர்வந் தவ்விட மமைந்தே, புங்கவன்றனைப் போற்றிநன் மறையைப் புகன்றவ னெடுதவம் புரிந்தார், இங்குநன்மாரி யின்றியே வருடம் பன்னிரண் டாகிய தெனலாம். (௬)

எங்குதான் போவோ மேதுதான் செய்வோ மிங்குள நாங் களென் றிசைத்தார், நொங்கிய தருண நாரதர் வந்தார் நோன் பெலா நோற்றவா நோக்கிக், கங்கைமா நதியென் றுயிர முகத் தாள் கடல்படுங் கங்கைநன்றுடன், தங்குமா வரசன் றனபதி யவன்றன் றருவதில் மாபலி யொப்பான். (எ)

ஆங்கவ னிந்த வருந்துயர் நீக்க மடைவதை யறிந்ததைக் காக்க, வோங்கிய தாள்யம் பொருள்வகை யனைத்து முதவியே யோம்புவா னெவருந், தீங்கிலா வரசனிழிகுலந் தவனென் றிது வரை யெண்ணியே சேரார், தாங்கொணுப் பசிநோய் தணிப்ப தேபெரிது தடையிலா தவனைநீ யடைவாய். (அ)

மூந்தவோர் மொழியை நாரத னுரைத்து முதலில கடைய வே போனுன், நொந்துள முனிவர் நோக்கியவ் விடத்தை நொ டிப்பொழு திடைவிடா தேகி, தந்துள வரசன் றனக்கிதை யுரை த்தார் தரணிபன் றுனும்வந் திவரைப், புந்தியாற் பணிந்து போற் றிசெய் திவரைப் புகனுவ தொருமொழி யானுன் (கூ)

அடியுளான் றனக்கு மகவிலா மையினு லருந்துய ரனேக நா ளமைந்தேன், படியின்மீ தொருநாள் பலருடன் கூடிப பார் வனம் வேட்டைமேற் சென்றேன், செடியின்கீழ் மதலைச் சிறுவி யைபார்த்தேன் சென்றெடுத் தாண்மனை சேர்ந்தேன், முடியுளா ய்சிசுவு முன்னகத் துறையான் முதல்வியைத் தீண்டிடா யென் றே. (கO)

புடையசரீரி வாணியும் புகன்றுள் புத்திபென் றடியனு முடனே, அடையுநன் னகரம் புறமுளவ வியதி லொருமாட மு ண்டாக்கி, உடைமுத லுண்டி யுள்ளது மளித்தே யுவந்துகாப் போரையும் வைத்தே, யிடையதில் பிணிக ளெய்திடா திருக்க வெளியனு லானதுஞ் செய்தேன். (கக)

நாளொரு மேனி யாய்வளர்ந்தொப் பினலம்பெறு குணமிகவு டையார், வாளொயி றனந்தன் சொலமுடி யாத வடிவை யெவ்வு லகினுங்காணேன், நீறுறு நிதியிற் தவத்தினு மதிகம் நேரிழை யவளும் நற்பருவம், வாளுறு கண்ணு ளவளைநீ ரோடு மகிழுவோ டு மளிக்குவே னென்றுன். (கஉ)

பொருந்திநீ ரிந்தப் பூவையை யுவந்து புகழ்மணஞ் செய் திடி லுமக்கு, வருந்திட வேண்டா தரசினில் பாதி வழங்குவேன் மாறிலா தென்றான், திருந்திடு தவத்தோ ரேனையோ ரேனும் பிருக்குநா ளளவினு மவர்க்கு, விருந்திட நானு மிருக்கிறே னென்று வேண்டினன் வதிட்டனை மிகவே. (௧௩)

யோசனை செய்தாங் குரைக்குது மென்றே யோர்பகல்த் தவணைநா ளுதவித், தேசிகன்போனான் திருவுளச் செயலைத் தெரிந்திலெனவிறை யிருந்தான், நீசனன் மரபினெழிவுளா னருந்தனேயநன் மகளைநா னணைந்து, போசனஞ் செய்து பொருந்திவாழ்வதிலும் போவது கருமமென் றிசைத்தான். (௧௪)

யாவருங் கூடி யங்கண்விட் டிழிந்தா ரழகிலை யென்றனள்வாணி தீவிர மொழியத் திரள்முனி வோர்கள் திகிலடைந் தேதிலரானு ஆவகை யாவு மறிந்தமா வசிட்ட னவைருமி றப்பரென் றஞ்சிச் சாவதைத் தடுத்து சகலரு முய்யச் சம்மதி யாகியே நடந்தான்.

என்றுதன் மனதில் விவையெலாம் நினைந்தே யிட்டதனைக் காப்பனென் றிசைத்து, சென்றன னரசன் றிருநக ரெய்தித் தெரிந்திட விசைத்துமங் குற்றார், கன்றலை யொழிந்தே யமைத்திடு சாலை யதில்முனிக் கணங்களை யிருத்தி, குன்றுறு முனிவர்குறித்தன வெல்லாங் கொடுத்தளித் தருளினன் கொடையோன்.

செப்பிய சேயைக் கொள்கெனத் தவத்தோன் செழுங்கரத் தளித்தனன் சிறப்பாய்த், தப்பிலா முனிவன் தானுவந் தங்கண் தனித்திரு வேள்விதான் முற்றி, யப்புற மழைத்துப் போவமென் றுரைத்தே யடைந்ததோர் க்ஷாமநாள் கழித்தார், ஒப்பிலா முனிவர் தம்மிடம் வரவே யுரியளும் உடன்வர நின்றாள். (௧௭)

அன்னவள் தன்னை யழைத்துமே போனா லாம்புக ழழிந்தன மென்று, நன்றுத லாளை நடுவழி நிறுத்தி நண்ணியுற் றிடவிடமமைத்தே, அன்னெறி அவளைக் குணத்துடனிருத்தி யழைத்திட வுருவன்யா னென்றான், முன்னவர்க் கெல்லா முதல்வனும் வதிட்ட னுரைப்படி யிருந்தனள் முனியாள். (௧௮)

மெள்ளநா மிவளை மேன்மையா விட்டோம் மேவினும் மெத்தவும் பெருமை, கள்ளமா மாயங் கருத்திது வென்று களித்

துமுன் னுறைதலங் கண்டார், உள்ளதோர் வயித்தி னுதனை ப்பு
கழ்ந்தார் உரைபதி செழிப்பையு முவந்தார், வெள்ளமாமாரி வி
ளைவு முண்டாகி மெத்தவும் விளங்குமப்பதியே (௧௯)

மருவுறும் செழிப்பும் மாமறைக் கொழிப்பும் மாமுனிக்
கொழாத்துட னிருப்பும், கருதிலான் கடந்தகாதலை நினைத்து
கன்னியுங் கவலைமேற்கொண்டு, இருபது வருடமளவுமே இரு
தாள் ஏந்திழை அவளென வெண்ணி, ஒருவருக்கொருவர் பார்
த்தினி திருந்தார் உற்றவட்குற்றதை யுரைப்பாம். (௨0)

கோட்டிடை நின்ற குளிர்மதி முகத்தாள் குளிர்மழை கோ
டையைப் பாராள், நாட்டமூன் றுள்ள தேவனை நாடாள் நான்
மறை வதிட்டனைத் தொழுதே, நாட்டிய வடிவும் நலமிகுமொ
ழியும் நான்கினும் கரணமும் பிசகாள், தீட்டிப தவத்தால் தீப
தேயெழுந்து திசைதொறும் மனலதாய்த் திகழும். (௨௧)

வேறு.

எறிந்தோடின புகைந்தோடின எதிர்ந்தோடின திசைபோய்
விறிந்தோடின விண்ணோடின விமலன் றலம் வெருவாய்க்
கறிந்தோடின மற்றெங்கணும் கனலாயின கார்மண்
சுறிந்தோடின தென்னில்லதை யாரேசகிப் பாரே. (௨௨)

அன்னுள்தவ மழியாதெனி லமரோ மெனவமரர்
சொன்னுரய னிடமேகினர் பலருந்துதி செய்தார்
என்னுமிது செய்வாமென விசைத்திட்டிட வினிமேல்
மன்னுயக னறன்மாதினை மணஞ்செய்யெனப் புகன்றார். (௨௩)

என்னுலது வாகாதெனக் கைலைக்கிறை யவன்முன்
சொன்னுரது சுருதிப்படி யுண்ணுமெனனச் சொல்ல
நின்னுலது நிலைசெய்திட நீவாவென நேர்ந்து
பன்னுளிறும் விடையானொடு பரிவாய்ப்பதம் பணிந்தார். (௨௪)

வேறு.

சுந்தர வதிட்டன் றன்னைத் தோன்றலும் வரவழைத்தே
இந்தமினென்பா டானுமிழிகுலத் துதித்தாளல்ல
நிந்தனை யாகா தென்று நீணிலத் தோர்கள் செய்யா
வந்தனள் யோனியன்றி அயோனியாய் வந்தா ளன்றே. (௨௫)

அருந்திட முள்ளவ காம மருந்ததி யெனவ குத்தோர் [னை
தெரிந்திட மணஞ்செய் யென்று தெளிவித்தார் வதிட்டன்றன்
விருந்திட வுண்ப வென்று வேண்டச சீரிகேட்டுப்
புரிந்திட பரிசைசூ தீபால் புகழ்மணம் புரியலுற்றான். (உசு)

நங்கையை மணஞ் செய்த நன்மையா லின்றுதொட்டுத்
தங்குமா புவியி லுள்ள சதுரெனும் வருணத் தாரு
மெங்கொரு மணஞ்செய் தாலு மிழிவென்ற விம்மின்னுளை
வங்கண மாகப் போற்றி வாழ்ந்திட வரமளித்தார். (உஎ)

ஆனது காலை தேவர் துந்துபி யார்த்தார் பின்னும்
வானினன் மலர்கடுவி வழங்கினன் குலிசன்றானு
மானநா ளணியப் பொற்பூண் வழங்கினன் காம தேனு
தானுண வளித்த திந்தத் தரையுளோர் பலருண் ணற்கே. (உஅ)

செப்பிய மணத்தைச் செய்து செழுங்களிப் போடு முற்றார்
தபபிலா மூவர் தேவர் தவத்துள பலரும் போனு
பொப்பிலா மறைவசிட்ட னுமைவிழி யாளுமொன்று
யிப்புவி வந்து சேர்ந்தே யிருநதிட்டா னினிமையாக. (உசு)

நல்லற மீதென் றெண்ணி நாயகி யோடு நண்ணச்
சொலலொரு நாளிற் பண்டுதூய்த்தவ முனிவ ரான [று.
வல்லரின் வல்லோர்க் கெல்லாம் வழங்குவேன் மணந்தா னென்
சொல்லிட வதிட்டன் சொல்லுஞ் சுக்கும முனிவர் கேட்டார்

எல்லையில் யோனி யன்றி யிசைந்திடு மாதர் தம்மைப்
புல்லுவோ மென்று சொன்னார் புனிதரு மஃதே யென்னி
நல்லது தருவோ மென்று நானூறு கூர்ச்ச லாடி
சொல்லின லுருவமுள்ள சுந்தரத்தோகை யானார். (நக)

தங்கிய தவத்தோர்க் கொவ்வோர் தையலைத் தானஞ் செய்தான்
பங்கதாய் நீனூ றியப் பாவைய ரொன்று மீந்தா
ரங்குறை வைத்திய நாத னருமறை தவத்தோ ளுகிச்
செங்கையை நீட்டித் தானுஞ் செய்யெனக் கவளை யென்றான். ()

ஆங்கையாற் றானஞ் செய்தா னற்புத வரனீ யென்றான்
வேங்கையா ளிவட்கு நாமம் வேறிலை யென்று சொன்னான்

வீங்கின வசிட்டன் றானும் வியப்புற்றார் முனிவ ரெல்லாம்
பூங்கணை யானைப் போற்றிப் பொருந்திவாழ் நாளிற் பின்னாள்.()

இப்படி தவத்தோர் நிற்க வெழிற்புவி யாளும் வேந்தன்
செப்பிடு மனுகு லத்தோன் சிறந்தவை வசுத னென்பான்
றப்பிலாப் புவன மூன்றுந் தனிக்கொடைத் தாளை யாளுன்
அப்புள கமலத் தோனை யரசன்போ யாங்குக் கண்டான். (௩௪)

எனக்குமோ தீக்ஷையில்லை யிபலவே யுபதே சித்து
மனக்குறை யிதனைத் தீர்த்து மாபுவி யனுப்பு மென்றான்
உனக்கிதை யுரைப்போ ரரிங் கொருவரு மில்லை யோர்வாய்
இனக்குறி யுடையார யின்னஞ் செப்புவோந் தெளிவாய்க்கேளாய்

புவிக்குள்ளே யுறைவோர்க் கெல்லாம் புவியோர்க ளறையவேண்
குவிக்குநன் பொன்னீந் தாலுங் கொள்ளுவோ ரொருவரில்லை[டும்
தவிக்கிற மனைதை விட்டுத் தரையுள்ள வதிட்டர் தானே
அவிக்கினமன்றி யன்பா யடைந்துநீ பெறுதி யென்றான். (௩௫)

அண்ணலிம் மாற்றங்கேட்டே யயனுல கதனை விட்டுப்
பண்ணுறும் வதிட்டன் றன்பால் மாமலர்ப் பதத்தைப் போற்றிக்
கண்ணன்றன் சிறுவன் சொன்ன காரியங் காப்பா யென்றான்
எண்ணந்தான் றீர்ப்பே னென்றே யிறைவனுக்கவனி சைத்தான்

அன்னது காண நாளே யறிவிப்போம் வைக்க வேண்டும்
மன்னுப கரண மெல்லாம் விரைவினில் வருவித் தாங்கு
பொன்னினூற் காப்புக் கட்டிப் புகழுறத்தீக்ஷை செய்தே
யெங்கிலத் தவருங் காண வெவர்க்குமாம் பரிசை யீந்தான்(௩அ)

அன்னது பெற்றுக் கொண்டே னழகிய மனுவே கேணீ
முன்னநா ளாகி யிவ்வூர் வைத்திய நாதன் முன்னோன்
றன்னவரா லயத்தைத் தரணியிற் புதுப்பித்திட்டே
மன்னவில் வளத்தை யேநன் னகரென வகுப்பா யென்றான்.(௩௯)

ஆயவ னுரைக்கு முன்னமாலயம் விரைவிற் செய்தான்
தூயமா நகரஞ் செய்தான் தோன்றல்வாழ் விருப்பஞ் செய்தான்
தோயநற் றடமியற்றித் தொடுத்திடு மாடம் வீதி
நேயமிக் குறப்புரிந்து நிகழ்மனு குலத்தோன் சென்றான். (௪0)

வேறு.

ஆகலா லெந்தத் தலத்திலே முத்தி யடைந்தவரளவிலா ரானோர், தீதிலாக் கங்கை முதற்பல நதிகள் பரவுநீ வாதலிச்சிறப்பார், கோதிலா வசிட்ட னுறைவதா லெந்தத் தலத்தின்சீர்கூறுவோ ராதன்றே, மாதுளா மார்பன் மகிழ்ந்தினி திருக்கின் மற்றதின் பெருமையார்வகுப்பார். (சக)

திருவதிட்டத்துறைப்படலமுற்றிற்று.

ஆ செய்யுள் உசசு.

## திருவாடுதுறைப்படலம்.

---

பெருமலர்த் தவிசோன் மகிழ்பதி யுதுவாம் பின்னரே நிருதியின் றிசைபால் தரைபுக ழாடுதுறையெனப் பெயர்கொ டலைமைசேர் துறைமிக வுயர்வாம், திருமல ராளுந் தினமும்விட் டகலா டிகழ்மறை வேதமுங் குடியாம், வருபலா தெங்கு வளர்கமு கோடு வாழையுங் கழையுமே வளரும். (க)

ஒள்ளியோன் பெயர்கொள் ளூறுதலத் திறைவ ருயர்தரு குற்றமே பொறுத்தார், கிள்ளைநன் மொழியா ளேலவார் குழலாள் கேட்டிடு தென்மொழி நாமம், நள்ளம ரவளூர் நாடின துறைப்பேர்நன்மனந் தெளிந்திட நாடில், அள்ளழ காடு துறையதன் சிறப்பை யானறிந் திட்டவா றுறைவேன். (உ)

வெய்யவன் றேரை விரைவினிற் செலுத்து மேன்மையான் சாரதித் தொழிலான், பொய்யிலா னவன்பே ருணனென் றிசைப்பார் போகமார் புரந்தரனுலகம், பையவே நடக்கும் பாவையாய்ச் சென்றான் பார்த்தனன் குலிசனும் பண்பால், ஐயுறவாகி யழைத்தன னவனு மனங்கனம் படுதலா லிசைந்தான். (௩)

பங்கமாய் நின்ற பாகசாதனனும் பாவையோ டொருபுடையேகி, அங்கமோ டிணைய வக்கணம் வாலி யழகுடன்றோன்றவே யருணன், தங்கமோ டவனைக் கொண்டு போய் ரவிபாற் சொற்றனனிரவியவ் வுருவம், மிங்குகாட் டெனக்கென் றிசைப்பவே யருண னெழிலுரு பார்த்துமால் கொண்டே. (ச)

சுந்தர நாரி யெழுவரு நாணச் சொல்லனப் பவையெலா மொன்ருய், முந்தவே நின்ற வரிவையோ டிரவி மோகமாய்த் தழுவியே யவனபாற், சந்தனப் பொதியத் தென்றனற் றேரோன் றனியுரு வென்னசுக் ரீவன், விந்தையாய்த் தோற்ற வவற்கு சாத் திரங்கள் விளம்பியே விடுத்தனன் புவியில். (௫)

அந்தர முள்ளா ரதிசயப் படவே யவனியிற் றவந்தனை பெய்தி, விந்தைய தாக வுயர்புலஞ் செலுத்தி மேவியே யோவியம் போல, மந்தர வெற்பில் மருவி நூறுண்டு மாதவம் புரிந்திட விரவி, சுந்தரம் விளங்கச் சகுணமாய்த் தோன்றிச் சுக்கிரீவனு க்கருள் புரிந்தான். (௬)

மைந்தநீசெய்த தவமுவந் தனமால் வரம்பிலா வாகுவு மழகும், பந்தம தகற்றுஞ் சாத்திர வுணர்வும் பண்புட னீயடைந் திடுவாய். சிந்தனை யுற்ற படியெலாம் வலியுஞ் செல்வமுந் திறமையுஞ் சேரும், எந்தனை நோக்கித் தவம்புரிந் துழலே லென்னரும் புதல்வவென்றேக. (௭)

ஓங்குகிட் கிந்தைக் கரசனுள்ள வுரமுள வாலிபாற் சென்றன், ருங்கிடா துழக்கத் தம்பியும் பயந்தே தனித்துமே யாற்றல னாகித், தீங்கமா வாலி தொடர்ந்தனன் றம்பி தாய்மனை யாளையுங் கவர, வீங்குமுன் னெதிர்க்கத் திறமிலா தவனு யிருந் தொளித் தேகின னவனும். (௮)

பீடையைத் தூரத்திப் பெரும்வலி பெறவே பேசிடு முனிவர்பா லேகி, நாடிய விடய முறைத்திடக் கேட்டா ருவப்புட னவன்றனக் குரைப்பார், நீடுமா நதிப்பேர் சுவேதையென் றுரைக்குநிவா நதித் தென்கரை யதனிற், கூடிடு மாடு துறையென வுண்டாங் குவலயந் தர்மமாம் பதிதான். (௯)

தேடிநீ சென்று தெரிசனஞ் செய்து திகழ்ந்திடத் தவத்தினையியற்றில், வாடிய மனந்தன் விருப்பெலா மாகும் வந்திடும் வலிமிகு நிதியும், கூடிடுமென்று குறைவற வறைந்தான் குணமுடை சுக்கிரீவனுக்கு, கோடில்சுக்ரீவ னவ்விடஞ் சென்று குலவி யுகதையினிப் புகல்வாம். (௧௦)

போனநா ளதனிற் புகழ் மறைப் புனிதன் புரிந்திடுங் கலைவலானவன்பேர், ஆனநல்வேத பண்டித னென்பானமருவான்

கோகுலா புரத்தில், வானவன் றன்னை மனத்துற வழுத்தி மற்ற வன் மனைவியாய் நின்ற, மானினேர் விழியாண் மைந்தனைப்பயந் து வருமொரு திங்களின் மரித்தாள். (௧௧)

பணிசெயு மம்மா திறந்தபின் வேதன் பாரிற்செய்நித்திய வோமம், அணியுள னாக மைந்தனைப் போற்ற அமையு மைங்கலை யினான் வவம்போர், தணிகிலா தாகத தாரமே கொண்டான் றன் சுதன் றகவுற வளர்ந்தான், கணிதமோ ரெட்டின் மணம்புரிந் ததன்பின் கலையெலாம் கழறினான் சுதற்கே. (௧௨

தந்தையின் மிக்க பண்டிதனானான் றரணியி லரசருந் தாழ்ந் தார், வந்தவன் பெயர்வே தாந்தனென் றுரைப்பார் வரிசையா ய் மணமுந வியற்றி, அந்தமா வேறுதுறைவகை யெல்லா மளந் தறி தன்மகனோடு, சொந்தமாய் வாழ்வுற் றிருக்குநா ளதனிற் சுதற்கொரு தோடம் வந்ததுவே. (௧௪)

ஏதெனக் கேணீ யிருவரும் வாழ்க்கை யெய்துறு நாளினி லிறைவன், றாதனை விட்டே யழைத்தனன் சுதனைத் தொடர்ந் தன னரண்மனை யவன்றன், காதலார் மனைவி பூத்தலா வில்லின் கடைப்புறத் தொதுங்கின ளிருந்தாள், தாதையா னவனு மற்ற வடுணையாய்த் தங்கினா னங்கணே ரிடத்தே. (௧௪)

அங்கைவா ளேந்தி மாநிலம் புரந்த வவனிபன் பேரவை புகுந்த, சங்கைதீர் கல்வி யறிவினிற் சிறந்த தனையனுந் தன்ன கத் தெய்தி, மங்கையாந் தனது சிறியதாய் தனித்து வளர்து யில் கூர்வதைக் கண்டந், நங்கையா டுணையா யயலுறப் படுத்தா ன் நாடிலன் வினைவிமற்றையா. (௧௫)

இப்படி யிவர்க ளிருவரு முறங்கும் வேளையி லியல்பிதாக் கண்டான், செப்பிடுந் திண்ணை சேர்ந்ததி லிருந்தான் சிறுவனுந் தாயிதை யறியார், மைப்படு மிரவு கழிந்தபின் னெழுந்த மகன் சிறு தாயெனத் தெரிந்து, தப்புயான் செய்தேன் றணிப்பைநீ யென்று தந்தையா லிறைஞ்சியே சலித்தான். (௧௬)

எந்தைகேள் பிழைக ளேதிலா தெனினு மென்னுயிர் துறப் பனென் றுரைத்தான், றந்தையா னவனுந் தடுத்துரைத் திட வுந் தரணியி லுள்ளபே ரெளிதா, நிந்தையாச் சொல்வர் நிலையி

லாத் தேகநீக்கலே பெரிதெனநினைத்தான், அந்தணன் ருனு மாய்ந்துநற் கழுவா யாமென விதனைமற் றறைந்தான். (௧௭)

புந்திநல் வாக்குக்காயமென் றிவைகள் பொருந்திடா தமைந்த நற்பாவந், தொந்தியா துன்னைத் தொடர்ந்திடா ததற்குத் தொல்லைநூ லறிவழியுளதா, லெந்தவா றென்னி லிங்குநற் றசி லியனுறு நீலமே தோய்த்து, முந்தவே யிருக்கு முனிபலர் வழுத்து மூதுள தலங்கணீ புகுவாய். (௧௮)

எந்தநற் றலத்தி லிருங்கலை வெளுக்கு மத்தல மெவற்றினு மேலாஞ், சிந்தையுட் கொண்டு சிறுவனே செல்வாய் செப்பிய வாடைதான் சீராய், சுந்தரச்சோதிச் சுடரொளியிலதேற் சொற்படி செய்க நீ யென்றான்; மந்திரம் வேறு மற்றுனக் கில்லை மாபிதா வாக்கியங் காணே. (௧௯)

சுத்திரன் றலங்கள் சொல்லிய வனைத்துஞ் சோதனை சொற்படி காணுன், சித்தியாந் தலங்கள் செகத்திலையென மெற சிவனை விடுவதா நினைந்தே, நத்திய சுவேத நதிக்கரை யதனை நண்ணியே யதன்புடை யடைந்தா, னத்தக வரைப்பி னடைவருந் துயரா லயர்தலை நண்ணினு னன்றே (௨0)

ஒத்தவவ் வுழியி லுறக்கமதானு ஞென்றுமே யுணர்விலொனுய்ய, வத்தனுமங்கு மேடமாய் வந்தங் கருவியி லாடையைச் சேர்த்துக், கத்திடு மோசை காதினிற் புகுதக் கலைவலா னெழுந்துடன் பார்க்கப், பத்தியநாகங் கங்குலு நீங்கிப் பானிறமானதுங் கண்டான். (௨௧)

இத்தலங் கான மெவருமிங் கிலையா லீசனிங் கிருக்கவு மிலையாற், கத்தனே யென்னைக் காப்பை நீ யென்றான் கண்ணுத லவ்வெதிர்ப்பட்டுப், பத்தனே குற்றம் பொறுத்தவ னென்பேர் பகர்தகர்த் துறையிதுவென்ன, மெத்தவுங்கேட்டே யுளங்களி கொண்டு விதிப்படி பூசனை புரிந்தே (௨௨)

அருளினுற் பரமனத்தல மமர்ந்தா ஞருளானவனினும் பெரியான், மருளுளா யங்கு மருவிநீ யிருந்து மாதவ மிழைத்திடினுனக்குப், பொருளுள நாடும் பூங்குழன் மனையும்பொருந்தி நின் பகைவனு முடியு, மருவிமேற் சொன்ன வாறுசெய் யென்னு மைந்தனுக் கருக்கனுமுரைத்தான். (௨௩)

கேட்டிடுஞ் சுக்ரீ வனுமிக மகிழ்ந்தே கிளத்திய தலமதை நோக்கி, வேட்டிடும் படியே சிவாநதி யதனை மேவியே விதிப்படி படிந்து, கோட்டுள மலரா தியாம்பல மலருங் கொண்டுட னத்தலத் தீசன், றாட்டுணை துணையா மனத்தினி லிருத்திச் சவுரியை தமய்னுக் கொண்டோன். (உச

தைலமே முதலாச் சந்தன மீறுத் தருமபி டேகம தியற்றி யயிலுறப் பலவா மடிசிலு மியற்றி யணிகொள்சோ டசங்களும் புரிந்தங், கியலுறப் பணிந்து கண்கணீ ரரும்ப வென்புநெக்குருகிட வினைந்து, துயிலுறும் போதில் கண்ணுதற் பெருமான் றோன்றின னருடரற் பொருட்டே. (உரு)

கொஞ்சநாட் சென்று குறுகுவ னிராமன் கொற்றமா வாலியைத் தொலைத்துத், தஞ்சநீ யடையத் தாரமோ டரசு தருகுவானிராமனே யென்றான், பஞ்சில்கொண் டடைந்த ரவிசுதன் கதையை வழுத்திடு மான்றுறை தலத்திற், செஞ்சடையீசன் வந்ததைக் கேணீ யென்னவே செப்புறலுற்றான். (உசு)

திருவாடுதுறைப்படலம் முற்றிற்று.

ஆ செய்யுள் உஎஉ.

## திருமான்றுறைப்படலம்.

அருந்தவா விதனுக் காறரை முக்கான் மாதிரு மான்றுறை யென்னப், பொருந்திய தலத்தின் பெருமையைப் புகலப் புண்டரீ கற்குமே யொல்லா, பெருந்தல மதற்குப் பேசவேறில்லைப் பெருநதி சுவேதைமற் றடையின், வருந்துற லனைத்துங் காணுமுன் போக்கும் வரமெலாம் வழுத்துமுன் வருமே. (க)

வேந்தனே யதற்குக் காரணங் கேண்மோ விளம்புவம் விரிகடற் புவியிர், சேந்தவள் விலாசச் சிறப்பெலா முடையாள் செழிப்புள கடகமா நகரான், பாந்தநால் வேதக் குலத்தினுற் பவித்தான் பகர்கலை யனேத்தையும் பார்த்தோன், காந்தையாளோடு கலந்துவாழ் வுறுவோன் கற்றவர் குச்சக னென்பர். (உ)

பூக்கமலத்துப் புனிதன்செய் புவியிற் பொருந்திய தவமெ லாம்புரிந்து, தேக்கமா முனிவர் தேவன தருளால் தேவிபால் கருப்பம் வாய்ந்துற்று. மாக்கடாம் போற்று நன்மக வாகி மதலைதா னுதித்தனன் மகிழ்ந்து, நீக்கலா மனைவி நினைவிலா னுநெ நெடுந்தவ நெடியனேற்ப. (ங)

நோக்குறு நுதலோ னொடுதிசை முகத்தோ னுவல்திரு மா லுமே நேர்ந்து, வூக்கமோ டுரைப்பார் பெருந்தவஞ்செய்யு முத் தமர்க்குத்தம நீசெய், நீக்கருந் தவத்தைத் திருவுள மகிழ்ந்தே நினைத்திடு வரமெலா மீவோ, மாக்கையின் மிருக சருமமேய்ந் திடலான் மிருகண்டு வென்கநின் பேரே. (ச)

தீங்கற வேட்ட வரமெலா முதவித் திருமகள் கொழுநனுந் திரும்பிப், பாங்குள வயனும் பரமனும் போனார் பாலனும் பலத ரந்துதித்தே, தீங்கறப் பிரமசரியநல் விரதந் திரன்பெறச் செய் தினிதிருந்தான், நீங்கல் செய் திதனை நீமணம் புரிவாயேனெரன நெடும் பிதா நிகழ்த்த. (ரு)

புவியின்மேற் பாவந் திரண்டொரு வடிவாம் பூவையைப் பொருந்துறு வேனோ, வவையெலா மறிந்து மடியனுங் கதனை யறைந்திடன் முறையதன் றென்னக், கவியெலா முணர்ந்த கர்த் தனே யினிநங் கால்வழி பெரய்த்திடு மென்றான், இவையலாது ரைப்ப வினிதுவே றிலையோ வென்பொருட் டியம்புதற்கென் றான். (சா)

சிறுவனு முரைத்த சேதிகேட் டையன் சீருள தனக்குநா னுரைப்பேன், முறுவலார் முல்லை மொய்குழற் சேர்ந்து முதல் வர்முத் தேவருமுற்றார், கறுவிலா வசிட்டன் காசிபன் கும்பன் கௌதமன் கலையுளார் முதலோர், பெறுமகிழ் வதனாற் பேசினரன் றிப் பெயர்த்துமென் செய்தனர்பேசாய். (எ)

ஆனதா னீயு மூகமகிழ்ந் தருள்வா யமைவது தென்புலத் தவ ர்க்கா, மீனமா மென்றே நீக்கலை கொள்வா யிதுமிகத் தக்கதே யென்றான், தீனமா வார்த்தை செப்புதல் வேண்டாஞ் செய்ம்மு றை விதிப்படி செய்ய, நானுமே யுவந்தே னுன்சொலும் படி யே நண்ணிடின் விழைகுவ னென்றான். (அ)

பெற்றதாய் தந்தை தமையன்பின் றுணைவர் பெறுவழி சுற் றமுள் ளவளாய்ப், புத்தியுள் ளவளாய்ப் பொருந்திய செல்வும் புகழ்குடிப் பிறந்தவள் புனித, மெத்தவுள் ளவளாய் மிகவுமே தூ லமெய்யிலாண் மிருதுவுள் ளவளாய்ச், சத்தமில் லவளாய்ச் சரகு நற் குணமாய்ச் சார்குறி னெடிலிலா தவளாய். (கூ)

ஒத்ததாய் தந்தை நோயுளோர்க் குதித்தா ளுருபிய வினை முளா ளொருக்காற், சித்தமே யிரங்காள் செவ்வனே முறுவல் செய்குவாள் பழுதுளாள் சிறுமை, சுத்ததன் வனப்புக்கிடிலை யென்று சொல்லுவாள் பெருமையை யுரைப்பாள், பத்தனு டிவ னை யுளத்தைவிட்டொழிப்பாள்பார்த்திடிற்கணிகைய ரியல்பாள்.

முந்துபெண் ணியலிற் சொல்லிய குற்றமுழுதுற நீக்கி நீ யெனக்குத், தந்திட லாகில் தாரமேகொள்வே னலதெனிற் றை யலைவேண்டேன், சிந்தியாயென்று செப்பினுன் சிறுவன் சேர்பி தா தேடுவானுகி, அந்தரநாட்டு மவனிபாதலத்து மலைந் தனன் றேடியேயலுத்தான். (கக)

இனியமை வேலை யாதென நாடி யிப்புவியனுமயக் காட்டி, னனிமகிழ் முனிவ னுசத்திய னென்பா னன்மகள் விருத்தையா நல்லாள், மனையதற் கேகியம் மாதினைக்கேட்டு மணமுடி மாதவா வென்ன, வினையிது வென்று வெருதவ ருரைக்க வேதனும் வி யாகுலந் தீர்ந்தான். (கஉ)

உயர்தவ னுடனு முள்ளமு மகிழ்ந்தே யொரு நொடிப்பொ ழுதினி லூர்ந்தே, யயர்தலில் லாம லவளையே கண்டா னகமகி ழ்ந் தவர்மிக விழைத்த, பெயர்பெற நின்று பெறுமுப சாரம் பெற்றபின் னிருவரும் பேசி, அயர்வுறு தங்க ளடிசிலு முண் டே யானபின் னரிவையைக் கேட்டான். (கரு)

சிந்தையின் படியே சிறுவனின் மகற்குச் சேர்ப்பதே சிறப் பதாமெனக்கு, முந்திபோர் வேறு முளர்கொலோவென்று முனி வனை வாழ்த்தி நீரிங்கு, வந்ததேயில்லை வருத்த நீர்தீர வதிதல் செய் திடுமிவ னென்றுன், முந்திடே லென்று முனிவருங் கேட் கூமுகமலர்ந் திருப்பதாய் மொழிந்தான். (கச)

காரிகை முனிவர் களித்தினி திருப்பக் கன்னியுங் கடும்புனல் தோய, பாரிய நேசப் பாவைக ளுடனே பரிவுட னடவியி னடந்து, சீரதாய் சென்றாள் செழும்புனல் தோய்ந்தாள் சீக்கிரம் வந்திட வெண்ணித், தாமணிக் கண்ணி தங்களோ டெழுந்தா டான் வரும் வழியினிற் கண்டாள். (க௫)

மதங்கொளு மியானை யுருவினைக் கண்டு மங்கைய ரோடினர் மனம்போல், மிதங்கொளாத தூரமோடியே மெலிந்தார் மெல்லியள் விருத்தையுந் தனியா, யொதுங்கினாள் பின்பே யோடினாள் வழியிலுயர்ந்துள தூர்வையான் மூடிப், பொதிந்துள கிணற்றில் வீழ்ந்தன ளறியாள் பொன்னெனு மங்கலைப் புதல்வி. (க௬)

அந்தமா வானை யப்புறம் போக வரிவையர் யாவரும் வந்தே யந்தநற் பெண்ணை யெங்கணுந் தேடி யெதிர்ப்படா தாகையா லோடி, யுந்தநற் பெண்ணும் யானைகண் டோடி யொதுங்கினள் பின்புயாங் காணோம், சிந்தைநீர் வருந்த வேண்டியதில்லைச் செல்வியைத் தேடிடு மென்றார். (க௭)

அறைந்தனர் முகத்தி லாவலித் தந்தோ வருந்தவப் புதல்வியை நீரே, புரிந்திரோ வென்றார் புராரிதன் செயலோ பூவையைக் கேட்டவன் செயலோ, தெரிந்திலே மென்றாரவள்விதிப் பயனைத் தேர்ந்திடுவாரெனச் சென்று, பிரிந்துமோ ரடியைப் பிசகிடா தடைந்தார் பெரும்புதற் கேணியைக் கண்டார். (க௮)

இறந்தன ளீண்டே யிருக்கிறா ளென்றே யினியதாய் தந்தை தன்னுயிரை, மறந்தவ ரானார் மணமுறைத் தவனு மாப்பழிய டைந்தன மென்று, சிறந்திடு நிட்டைச் செயலினா லறிந்தே சிறுமியைத் தருகுவன் றிலனெய், மறந்திடா துடலைப் பேணுமினென்றே மன்னினன் பெருந் தவமறையோன். (க௯)

உந்தொரு கடத்தை யணுகியத் தகனை யுளத்தினிலிரீஇத் தவமியற்ற, முந்துமக் களிறும் வந்திவன் றன்னை மோர்ப்பிடரேற்றியே செல்ல, வந்தவா றென்னென் றோதியா னோக்க வளங்கெழு கலிங்க நாடதனி, னந்தரி புரமென் றொருநக ரதனி னொன்னினுஞ் வணிகர்தங் குலத்தான். (௨0)

அனையவன் றேவதத்தனும் பேரோ னவனருந் தவத் தினும் பெற்ற, தநயனுந் தருமதத்தனு மவனுந் தழைபெருஞ்செல் வமோடுறநா, ளனையுடன் பிதாவு மிறந்திடத் துயரி னழுந்திடு மேல்வையி னவன்பால், விநயமா யிரச வாதிவந் தடைந்து மிகு பொருளனைத்தையுங் கொணர்வாய். (உக)

இடம்பொருள் வைக்க வினியிலை யென்றே யியற்றுவ னெனவுரைத் திடலு, மடம்பெறு மனத்தோன் மனையுள பொருளு மற்றைய தருமமும் விற்றுத், திடம்பெற த்தாலு மவையெலாம் வாங்கித் தெரியவோர் குகைதனில் வைப்பித், துடம்படப்புகையான் மயங்குழி வஞ்சித் தொருகுகை முன்னின வைத்தான்.

அப்பனை யிங்கு நினைக்கரி யாகவாக்கினேங் குறைகளொன்றில்லை, முப்பகன் மனத்துங் காளிமை நினைந்து முதுமகம் புரிதரல் வேண்டும், அப்பகல் வரையு மனத்தெமை நினைத்தே யருந்தவ முழுத்தினீ யென்றே, செப்படி வித்தை காட்டியோன் சென்றான் செல்வனு மவ்வண மிருந்தே. (உ௩)

போனவன் றன்னைத் தேடியே காணான் புகுந்தறை திறந்து பார்த்திட்டா, னனவிக் குகையுங் கரியதாயிருக்க வவனிமேல் விழுந்துயிர் மாண்டான், வானமர் தருமம் விற்றகாரணத்தால் வங்னன் களிறென வாய்ந்து, தானதை மாற்றத் தன்றவந் தன்னிற் றனியொரு காட்டவந்தந்தான். (உ௪)

தந்தியா முருவம் போயவன் றானுந் தாங்கரும் விமானமேற்கொண்டு, வந்தியா வெவரும் வழுத்துற வமரர் வான்பத மெய்தினான்வள்ளல், சிந்தியா முன்போ லந்தகற் குறித்துச் செய்பெருந் தவத்தினா லவனும், வந்துடன் விருந்தையுயிர்தனை நல்கிவழுத்தியே போயினான் மன்னே. (உ௫)

இங்கிவை நிற்க விவையெலாங் கேட்டே யெழின்மிகு மிருககண்டேயன், சங்கரற் றியானித்துறு தவமியற்றச்சம்புவுமினிதெழுந்தருளிப், பொங்கு மாதவத்தோய் வேட்ட வைபுகறி புரிகுதும வேட்டவா வென்று, னங்கண வடியேன் பவஞ்சவாழ்க் கையினாட் டழுந்துத லழுங்கிதோ வென்றான். (உ௬)

மிக்கமாதவங்கோபுசத்தியன் மகளை மிகுகடி மணம் புணர்ந்தெம்மைத், தக்கவா பூசை புரிந்திடி னினக்குத் தநயன் மார்

க்கண்டன் வந்துதித்துப், பொக்கமாறியவன் பாலெமைக் காசி புண்ணியத் தலத்தினிற் போற்றி, நக்கனம் மருளாற் சமனையும் வென்று நற்புகழ் பெருக்கு நின் வழிக்கே. (உஎ)

ஆதலாலின்றே யருங்கடிக் குரிய வாக்கென மேவண்டுமெவ் வாறே, காதலாலவற்குக் கடிமணம் புணர்த்திக் கலியாண சுந்தரநாம, மாதவா வெமக்கு வழங்குக வென்று மறைந்துடன் போயினன் வள்ள, லேதுவா லிதற்கு மான்றுறை யென்ன வியம்புவர் கற்றறிந்தவரே. (உஅ)

திருமான்றுறைப்படலம் முற்றிற்று.

ஆ செய்யுள் ௩௦௦.

---

## திருவாலந்துறைப்படலம்.

---

இசைகொளித்தல மொழிந்தன மிதன்குட திசையி
னசைவி ளங்கிடும் பதிக்கிணை நவிலுவ ருளரோ
பசையி னன்மைக ளியாவையும் பலித்திடும் பாரில்
வசைகள் யாவையு மொழித்திடு மதன்பெயர் வழங்கில் (க)

சொன்ன நாமமா லந்துறை யென்னவே சொல்வர்
பின்ன தின்பெயர் மால்புரம் பிரமன் றன்புர
மன்ன வாலயத் திறைவர்பே ரீசனு மண்ணல்
நன்று தற்பரட்டி பேர் பெரியநா யகியே. (உ)

பெரிய மாதவர் யாவரும் பெயர்வுறு தமர்வார்
அருவி யாநதி சுவேதையு மவ்விடம் வசிப்பாள
பிரிய மாக்கமு க்ரிசனந் தெங்குமே பெருகும்
உரிய வாணிபர் மறையுளார் குடிவகை யுற்றார். (௩)

அருமை யாந்தல மனைத்திலும் பெரிதிதா மந்த
உரிமை யானதை யுரைக்கிறே னுட்புறம் பெல்லாந்
தரும மாந்தலந் தேட்டிடு தரணிப முன்னம்
பெருமை வேலையி னமுதத்தைப் பங்கிடப் பெறுநாள். (௪)

வஞ்ச மாஞ்செய லரக்கனு மமுதத்தை வவ்வி
நெஞ்ச முண்டன னென்றுதா னிரவியுங் கூற

கஞ்ச நாபியான் கண்டதைக் கந்தர மரிந்தான்
முஞ்ச லுற்றது மொழியுமவ் வரக்கன துருவம். (௫)

ஓரி ரண்டெனுங் கூறதா யுடறலை வேறாய்ப்
பாரி னுற்றது விண்ணெழிற் றித்தலப் பதியில்
மேரு வில்வலாய் காவென கம்மது விளம்பச்
சேரு மீசனுஞ் சிலவர மளித்தன னிங்கே. (௬)

ஐய ஞாலத்த னங்கமு மவ்வுரு வாகி
செய்ய கேதுவு முடல்பெறச் செப்பிய ராகு
முய்யுங் கோளுட னுற்றன ரொருநவ மாக
செய்யி னுந்தவஞ் சேருங் கதியினிற் சேர்ந்தான்.

அச்சிரந்தவம் புரிந்ததா லத்தல மதற்கு
மெச்சிப் பேசினர் சிரபுர மெனவதை மேலா
வச்சு விருட்சமும் வயங்கிடு மப்பதி வதிந்தால்
நச்சு நோய்களு நாடிடா தோடிடும் நவிலின். (அ)

பன்னு மாலதிற் பெருந்தவஞ் செய்தனன் பலநா
ளென்ன காரணத்தாலென விறைவனே கேளுஞ்
சொன்ன காசிபன் சுதன்பெய ரிரணிய சொரூபன்
றன்னைப் போக்கிடச் சிங்கமு யவனவ தரித்தான். (௯)

மங்கு னிறத் தசுரனை மடியினில் வைத்தே
யங்கை யாலவன் வயிற்றுள வுதிரநீ ரருந்த
சங்கை யின்றியுஞ் சன்னதங் கொண்டுதான் சால
தங்கு நற்புவி யாரையுந் தளர்வுசெய் துறைந்தான். (௧௦)

அந்த வேளையி லண்ணலுஞ் சரபமா யமைந்து
சிந்தை கெட்டுறுஞ் சிங்கன்மேற் சென்னியிற் சீறு
வுந்தி னுனக முதிரமும் மொருகொடி குடித்தான்
சிந்தை நைந்தனன் சீதரன் சிங்கமா னவனே. (௧௧)

அன்று தொட்டவன் றுயருளா னுசித்தன் னுகம்
வென்றி வேண்டியே புண்ணிய நிவாநதி மேவி
நன்றி பெற்றிடப் படிந்தான் பதத்தினை நாடி
யொன்று றும்படி பூசனை விதிமுறை யுஞற்றி. (௧௨)

பணிந்தெழுந்துநின் றஞ்சலி பன்முறை புரிந்து
துணிந்தெழுந்து தோத் திரம்பல கண்கணீர் சொரிய
வணிந்த கொன்றையோன் விடையின்மேற் றிருவுருவாகித்
தணிந்த நல்லரு ளோக்கினன் றருவனென் றிசைந்தான். ()

பன்ன கேசன்மேற் பள்ளிகொள் பசுந்துழா யவன்றான்
சென்னி நீருள செல்வமே சிவபெருமானே
இன்னலி யாவையு மிரித்திடு வாயென விரந்தான்
முன்னிருந்திடும் வலியெலாம் பெறுகென மொழிந்தான்

சொன்ன போதினிற் றுழாயவன் வணங்கியே சோதி
பின்னு நானரும் பிழைகளைச் செய்யினும் பெரிதா
வுன்னுமே றுன்றன் கருணைசெய் வாயென வுரைப்பக்
கன்னல் வேளினைக் காய்ந்தவன் கடைக்கணித் தளித்தான்.

மற்று மத்தலத் தருசய மானதை வகுப்பாம
ஒற்றை யாழியா னுலவுமா புவியையா ளுறுவோன்
சுற்ற றிந்தநன் மரபினான் கலிங்க நாடுடையான்
பெற்ற மூர்தரு பிஞ்ஞகர்க் கானவன் கண்டாய். (கசு)

களமர் தங்குறை சொன்னதாற் காட்டிடை வேட்டை
வினைதல் செய்திட விழைந்தனன் வெல்கதிர் வேலான்
தளமனைத்தினும் வேடுவர் மான்வலை கட்டிக்
களப மான்முத லுயிர்வகை பலவுமே காய்ந்தான். (கஎ)

கருது வேட்டையாற் கடும்பகற் கண்டுகாவல்னு
மரிது நீரெனப் பேர்ந்தன னடவிகள் விட்டே
திரித லானதால் வன்மலை யருவியுந் தேடித்
தெரிதல் காணலா மென்றவ னோடினன் சிற்றார். (கஅ)

கன்றினன் பதி கடுகினன் கலைமறை வீதி
சென்றனன் னதிற் செழுமறை வேதியன் வீட்டில்
நன்றெனத்திரிந் துள்ளன பலவற்றை நண்ணித்
தின்றனன்னதைத் தீர்ப்பதற் கார்வலார் திறலோய். (கசு)

ஆக்கு நற்பல பண்டங்கள் யாவையு மயின்றே
தாக்கு நற்பசி தணித்தனன் றரணிபன் றானு

மேற்குந் தென்புலத் தவர்க்கென வீட்டிய வெல்லா
மூக்கமுற்றுட னுண்டன ளொருநொடிப் பொழுதில். (உ0)

நாட்டம் வைத்துநான் பிதிர்க்கென நண்ணிய வெல்லா
மூட்டஞ்செய்தனை யுலகுளா யுணர்விலா மையினுற்
காட்டி னுற்றிடுங் காகமாய்க் கனவுரு வெடுத்து
நாட்டிற்செய்திடிப் பிண்டநீ பொசியென நவின்றான். (உக)

என்று சொல்லிய வந்தணன் பின்னரு மெய்திச்
சென்று பற்பல கறிவகை யெவற்றையுந்தேடி
பின்றிச் செய்தனன் றிதிதனைப் பிண்டமு நல்க
முன்றி னுற்றவவ் வாயச முனிவனை நோக்கி. (உஉ)

இந்தச் சாபத்தை யொழித்திட வுபாயம்நீ யிசைத்தே
யுந்தச் செய்திடிற் றிகழ்மறை வேதனே யுனக்கிங்
கெந்த ஞட்டினிற் பாதிநா டளிக்குவ னென்றான்
புந்தி வல்லனுங் காகமுஞ் சுற்றினர் புவியை. (உ௩)

எங்குஞ் சுற்றிப்பின் னித்தலம் வந்தன ரிவர்கள்
அங்கு றைந்திடுஞ் சிகரிபா லுற்றன ரன்றி
புங்கவா வர னாதனை வலம்வந்து போற்ற
மங்கை பாகனும் மகிழ்துநன் மன்னனு கென்றான், (உ௪)

கங்கு னீநிறக் காகமா முருவமுங் கடத்தி
தங்கு மேனியும் பொன்னிறத் தரணிப னனை
னெங்க ளுபகர் வெந்தையே யென்னையா ளுடையாய்
துங்க வெள்விடை யாயெனப் பணிந்தனர் துதித்து, (உரு)

என்று போற்றினு னிறைவனு மிசைமறை யவனுக்
கன்று கூறிய படியவ னவர்க்கதை யளித்தான்
ஒன்று றும்படி யந்நகர்ப் பார்த்திப னுறைந்து
மன்ற லாரத்தான் றன்பதிப் பொருளினை வரித்து. (உ௬)

பண்டை நாளுள வாலய மானதாற் பணிகள்
கொண்டல் தாவிடு மதில்வகைக் கோபுரங் குயிற்றிக்
கெண்டை யின்விழிக் கவுரியின் னலயங் கிளரச்
சண்டி கேச்சுர னலயப் பணியெலாஞ் சமைத்தான். (உ௭)

பின்னு மாகமம் பேசிய படியெலாம் பிறங்க
முன்னைத் தந்திடு நிலத்தினு மும்முடி யுதவி
இன்ன லன்றியே பூசைக்கு வேண்டிய வெல்லாம்
உன்னல் கொண்டவ னுதவினு னுவப்பொடு மொருங்கே. (உ௮)

அன்று தொட்டதில் விழாவெலா மரபுளி நடத்தித்
துன்ற லுற்றவுய் யானமுஞ் சோலையு மமைத்து
நன்று றும்படி புரிந்துதன் னாட்டிற்கு நடந்தான்
கொன்றை யான்பதி யடைந்தமை கூறினே முனக்கே. (உ௯)

சொல்லி வந்திடு தலத்தினிற் சுருதியே முதலா
வெல்லை யிற்றவ மிழைத்தவ ரீறிலா தவரால்
சொல்லினும் பழி யகற்றிடுஞ் சிறப்புமிக் குற்ற
நல்ல தாந்தல மிதன் புடைநவின் றிடக்கேளே. (௩0)

திருவாலந்துறைப்படல முற்றிற்று.

ஆ செய்யுள் ௩௩0.

## திருவாதிதுறைப்படலம்.

ஐம்புலத் தமையும் பாவ மனைத்தையு மாற்றி வைக்கும்
பம்புநற் பரமன் வாழும் பதிதனைப் பகர வெண்ணி
னும்பரும் முனிவரி யாரு முரைக்கொணு முதன்மை யுற்ற
சம்புவின் றலத்தைச் சார்ந்த சத்தநற் றுறையி லொன்றே. (௧)

கண்டிடு மிதன்மே ருனு கடிகையா மதனுக் கப்பா
லெண்டக வனைத்து நல்கு மெழிலாதி துறைய தென்ப
ரிண்டைசே ராதி சத்தி யீசனு மிறைவ னுமங்
கெண்டையங் கண்ணு ணுமை கிளர்தரு பெரிய நாயகியே. (உ)

வேறு.

தூக்கல் செய்திடவே முடிவுரு தெவர்க்குந் தூயவித் தலத்தினின் மேன்மை, யாக்க மெண் வகையு மமைதரு சித்தி யத்தலமடைந்தவ ரடைந்தா, ரேக்கமாம் பிறவி யெடுத்திடார் பின்னு மிடைவரும் பிணிகளுஞ் சாரார். நோக்குறு மளவின் மிகுமகப் பலனு நோபிற்னுந் தவப்பயன் மிகுமே. (௩)

## திருவாதிதுறைப்படலம்.



வேறு.

நம்பு மாமுனி வரனவ னத்திரி நாமன்
பம்பு நற்றவப் பகுதியின் மேம்படு பண்பான்
துன்ப மென்பதைக் கண்டறி யாதவ னேய்மை
யின்ப மீந்திடு மிவன்மனை யெழிலனு சூயை.

கற்பின் மிக்கவ ளருந்ததி தன்னையே கடுப்பாள்
பொற்பு மேனியின் பொன்னுல கதனினுமில்லை
சிற்ப வேலையிற் செழுங்கரந் தேர்ந்தவள் சிறப்பாள்.
கற்க வேண்டினோர்க் கருளுவாள் கருணையே மிக்காள். (௫)

இல்லற மதனிலே யிவர்கள்வா ழனையி லொருநாட்
சொல்லு நல்லிசை நாரத முனிவனுந் தூயோன்
பல்ல நாளுமித் தோகையாள் கற்பினைப்பழிச்சி
யெல்லை யில்புவி யெவருமே யறிந்திட விசைப்போன். (௬)

விந்தை யாகநல் லிருப்பெனுங் கடலையை வேண்டி
பந்த மற்றநற் றிருமகள் வாணிபா ரதிபாற்
கந்த நாண்மலர் கழலிணை கசிவுற வணங்கி
வெந்த கண்டலா யளித்திடு மென விளம்புற்றான். (௭)

எந்த நாளினு மெவருமே செய்திடா ரிதனை
யந்த நாளிலெம் மாண்முடி யுங்கொலோ வென்று
தந்த வார்குழ லாரவர் மூவரும் கழநச்
சந்த மேவிய வத்திரி முனிமனை சார்ந்தான், (௮)

கிரண மேற்கொளு நாரதன் கிட்டலு முனியத்
தருணம் வம்மென வாசனஞ் சடுதியி லமைத்து
திருண யத்தோடு மிருத்தியே முகமனு நிகழ்த்திப்
பருணசா லைக்குநீர் வந்தவா றென்னெனப் பகர்ந்தான். (௯)

பாங்கு கொண்டவிக் கடலையைப் பக்குவ மாக்கி
யீங்களித் திடுகயான் வந்தது மிதற்கென விசைத்தான்
ஆங்குயர்ந்திடு மம்முனி பன்னிமுந் தானை
வாங்கி மந்திரத் தாவிமீ தெழவறுத் தீந்தாள். (௧௦)

பத்து நாலுள வுலகத்திற் பக்குவம் பாரேன்
கத்து வாரிதி சூழ்புவி யதனிலுங் காணே
னித்த கைப் புரிவோரென வியம்பிமுன் சொன்ன
முத்த வாணகை யார்முன்போய்க் கொடுத்துண மொழிந்தான் ()

வெந்த தானவிக் கடலையை விழைவுடன் கண்டு
யெந்தி டத்தினி லெவர்களா லளித்ததென் றிசைத்தா
ரிந்த னங்களை யெரித்திடு மெரிக்கெரி யிணையாள்
சுந்த ரத்தினுங் கற்பினுஞ் சொல்லொணு திணையே. (கஉ)

தண்ட காரணி யத்துள வத்திரி தவத்தாற்
கொண்ட நன்மனைக் கோதையாள் கொடுத்தன ளீதைக்
கண்டி ரோவெனக் கற்பினின் மேன்மையைக் காட்டி
விண்ட மாதவ முனிவனும் விரைவுட னகன்றான். (கங)

வேறு.

அகன்றனன் முனியு மப்பா லவமதிப் பதிக மாகிப்
புகன்றிடு மங்கை கற்பைப் போக்குவ மென்றே யெண்ணி
நகம்பெரு முலைமூ வோரு நாயகர் தம்மை நோக்கிச்
சகந்தரு தலைவி ரன்னாள் கற்பினைத் தவிர்ப்பீ ரென்றார். (கச)

பகவர்தம் மாதர் மூவர் பகர்ந்திடு மொழியைக் கேட்டு
பகவனூர் மூவர் தாமும் படிமிசைப் புருடராகிப
பகவன்றன் சத்தி பெற்ற பதியிலாச் சமயம் பார்த்து
மிகவன்பி னுடை நீத்து வேண்டுவம் பிட்சை யென்றார் (கரு)

நித்தியம் மூவர் கேட்ட நினைவையுங் குறிப்பும் பார்த்துக்
கத்தனன் பூசைக் காகுங் கமண்டல நீரை யள்ளி
சுத்தநன் கற்புமேன்மை சூழ்ந்திடிற் சொல்லு முன்னே
அத்தர்நீர் பாலராவீ ரென்றறலு மாயி னூரால். (கசு)

ஆங்குதன் பதியையெண்ணி யம்புனல் தெளித்தலோடும்
தீங்கலாச் சிறுவ ரானூர் தேவியு மாடை நீத்து
பாங்கிபோ லமுத மீந்து பாலரை யேணை யிட்டா
டீங்கினூர் பலரா ளங்கே தோய மூவர் தாமும். (கஎ)

இப்படி யிருக்க வீங்கே யேவின மூவர் தாமுஞ்
செப்பிடுங் கவலை யுள்ளார் செயல் மறந்தவர்களாகி
யொப்பிடா வீணை மீட்டு முயர்முனி தன்னைக் கேட்டார்
ஙைப்படி கண்ணன் செய்யு மாயையின் வதிந்தா ரென்றார். (கஅ)

ஆனதா லாங்குச் சென்றே யவனை நீ துதித்துக் கேட்டாற்
போனபேர் வருவாரென்று புகன்றனன் முனிவனங்கே
தானது செய்ய நாணந் தாங்கியேதைய லார்தாங்
கானமே பெரிதாவுற்றவாதாதியந் துறையைக் கண்டார். (கசு)

அப்பொழு தங்கணின்றே யம்பிகை தவத்தைச் செய்தா
ளப்பொழு தாதிசக்தி யீசனு ராங்குவந்தார்
ஒப்பிலாப் பூசை செய்தா ளுமையெலிந் துரைத்தா ளங்கு
நெப்புறுங் கண்ணனங்கு நெடுந்துய ரகலச்சொல்வான். (உ0)

திக்கிடை யுன்றன் சீர்த்தி தேவரா னவற்கு மில்லை
அக்கநன் மணியே குற்ற மனைத்துமே வகல வன்பா
யக்கொடி மடவாள் பக்க மடைந்துநீ யவனைக்கண்டு
துக்கமாந் குறைகள் கூறித் தொழுதுநீ சாற்றுகென்றான். (உக)

அவ்வுரை தலைமேற்கொண்டே யரிவையரிருவரோடு
மவ்வனுசூயை பாற்போய் யறிவித்தா ரவைகளெல்லா
மூவவுல கங்கள் போற்று முதலுமை மலராள் வாணி
கவ்வையை யொழித்தே யெங்கள் கணவரை யளிநீ யென்றார். ()

இப்படிச்சொல்லக் கேட்ட யெழிலனு சூயை தாழ்ந்தே
யொப்புள வர்க்கிய பாத்ய வுபசார மனைததுஞ் செய்து
கைப்படுஞ் சிறுவர் தம்மைக் காளையராக்கி முன்போற்
றப்பெலாந் தவிர்த்து விட்டே தையலீர் கொண்மி னென்றான்.

தங்க ளுபகரைக் கூடுந் தன்மையா ளுளம்பூ ரித்தே
யெங்குள கற்பின் மிக்கா ரெவர்களு நின்னை யேற்ப
பங்கமில்லாமல் வாழப் பல்லாண்டு பலவாய்க்கூறித்
தங்கடா ளங்க ளுற்றார் தத்தமக் குரியா ரோடும். (உ௪)

ஆலமுண் டவனைப் பூசை யம்பிகை புரிதலாலே
நீலமாரீ தலத்தினுமஞ் செப்பாதி துறையாயிற்றன்

மூலமா மதனைக் கொண்டு முனிபல ருறைந் தாரங்கு
காலமும் பயனுங் கொள்வா ரீதன்றிக் கருத்திடாரே. (உரு)

என்னகர் விட்டு வந்திங் கிறிலா நாள்க ளாச்சு
தொன்னகர் தனிலே ராசன் றுரைத்தன மின்மையாலே
அன்னதா லூருக் கேக வனுமதி யருளீரென்று
மன்னவன் சொன்னு னிங்கு மாமுனி யுரைக்கலானுன். (உசு)

சொல்ல வேண்டிய தொருதுறை யிருக்குது சுருக்கி
னிலவி யம்புவே னிருபனே நீயதைக் கேட்பாய்
தொல்லை நாமுள தேவரு முறைதல மிஃதே
யல்லவா வதின் மகிமையைக் கேளென வழங்கும். (உஎ)

திருவாதிதுறைப்படல முற்றிற்று.
ஆ செய்யுள் நுறுஎ.

---

## திருக்கரந்துறைப்படலம்.

---

மதிபுன லணியு மாதிநன் மஹேசன் மருவுறு தலத்தையே கேணீ, துதியரத்துறைக்குக்காதமோ ரரையிற்சொல்லிடும் கீழ்த் திசை யதனிற், பதியுள தொன்று நாமமற்றதற்குப் பகர்ந்திடிற் கரந்துறையாகு, நதியதின் றென்பால் நாட்ட முன்றுடைய நாயக ரமருவாரென்றும். (க)

கழையொடு சாலி யரம்பையுங் கழனி கனத்ததெங் கதுவுமே சூழும், விழைவொடு பொழில்கள் விளங்குநன் குடிகள் விரிந்துள வூரினன் றுமை, முழிவிலாத் தெய்வ நகரமாங் கோட்டை யழகிய பேரதற் காகு, மழைதவழ் பொதிகை யதிலுறை முனியுமாயனும் பூசை செய்திட்டார். (உ)

ஆனநற் றலந்தா னமைந்ததை யறைவே ன்றிருரிலறிருனே யறிவாய், போனதோர் யுகத்தில் புரந்திடும் பாண்டு மரபுளான் புனிதனுய் வந்தா, ஞனவனுகும் நரேந்திர னுமன் றுன்வெகு தரணிகா வல்னுய்ப், பானுசூழ் புவியைப்பாலனஞ் செய்தான் புகர்மனு விதிப்படி பாரில். (ங)

ஆங்கவ னரச னான நாளதனி லனங்கனை யடக்கல னாகிப் பூங்கணைத் துன்பம் பொருந்தி யோர்கனியைப் புகழ்மணம் புரிந்தினி திருந்தான், றூங்கமண் ணதனிற் சுதனிலா மையினுற் றவத்தினோர் தம்மருளாலே, நீங்கிலாக் குணமுந் திறல்வலி யூக்கந் திரண்டுள சிறுவன்வந் துதித்தான். (ச)

உற்றசேய் தனக்கு வயதோரீ ரேழி னுற்றதா யுலகுவிட்டொழிந்தாள், அற்றைநாட் சகல சாத்திரந் தன்னி லழகனுய்ச்சிறுவனு மமைந்தான், மற்றுமோர் கரும மனமுடன் செய்தான் மாநிதி மறையவர்க் கீந்தான், பிற்றைநாட் டந்தை மீனகேதனனுற் பெரும்பிணி யுற்றுடல்வெதும்பி. (ரு)

காந்தைய ராசைக் கடக்கொணு ததனுற் கடிமணம் புரிகுவனென்றே, யேந்துமென் மருகி யவண்மிக வெழிலா ளிசைவலா ளிலக்குமிக் கொப்பாள், வாய்ந்தநன் மடந்தை வயதுளாளவளை வையகத்தோர்களு மறிய, ஆய்ந்திடு மாலை யணிகுவே னென்ன வவன்மக னதற்குமே நேர்ந்தான். (சு)

ஆதலாலந்த சித்திராங் கதையை யன்புடன் விவாகமே செய்தான், காதல ரிருவர் கலந்துறை நாளிற் கணவன்மே லன்பிலாளாகித், தாதவிழ் மலராடன்னுளத் தெண்ணந் தன்மகன் றன்னொடுஞ் சொல்லித், தீதிலா துனக்கே யுரிமை யெனென்றிம் மொழிசெவிப்பட வுரைத்தாள். (எ)

சொன்னதைக் கேட்ட சுகுணசாரங்கன் சுரோத்திரமடைத்துநீ சொல்லு, மன்னதோர் மொழிக்கு மமைவனே வதுவும நீதியோடுறுபழியலவோ, முன்னைநா ளுளதிம் முறைமையோ பாவ மூவுலகத்தினு முளதோ, அன்னைநீ யுரைத்த கட்டளையாலே காகிபோய் வருவனென்றுரைத்தான். (அ)

காரிகை நாணிக் கருதுவாள் யுத்தி காவல னறிந்திடினம்மைப், பாரிதா னலனென் றுக்கினை செய்வான் பதியைவிட் டோட்டியே விடுவான், கோரினுள் முன்னஞ் சிறுவன்மேல் வைத்துக் கூவிடில் குறைவராதென்று, சேரவே மனது திடம்பெற வெண்ணித் தெரிவித்தா ளரசனு மறிந்தே. (கூ)

மாயமா துரைத்த வார்த்தைகளைக் கேட்டு மனனுளும் மனம்பொருளாகித், தாயிடஞ் செய்த தப்பினுன்மகனை தனிக்கரந்தானையுந் தறித்துத், தீயனின் பாவந்தீர்க்குவேனென்றான் கொலைசெயுந்தீயரையழைத்துச், சேயனைக்கொடுமேராய்ச் செழுஞ்சுரம தனிற் சீக்கிரங்கால் கரஞ் சிதைமின். (கo)

என்றுதான் சொல்லியேந்திழை தனக்கு யினைந்திட வகைமிக வுரைத்தே, கொன்றுநப்போன குழவியின் வலக்கால் குறிப்படி வலக்கரங் கொய்தார், கன்றியே யெவருங் கருமமென்றகன்றூர் கடுங்கொலை யாளருங் கடந்தார், இன்றிவன் புரிந்த பழியென வந்திங் கெய்தின விரவினி லிருளே. (கக)

அண்டர்கள் முனிவரியாருமே துதிக்க மறிஞரிமறிஞறைஞ் சிறுவன், கண்டுமுற் காலஞ் செய்வினைப் பயனுல காணுமூழ் வினையிது வென்றே, கொண்டவில்வுலகில் நிறைந்தினி திருக்கும் கோலமே நீயெனைக்காவாய், பண்டுநீகூட லாடிய பரமாபாருணக் கழகதோவென்றான் (கஉ)

அந்தமாய்ச் சொல்லியழுமவ னுரையை யண்டாக ளறிந்ததேயன்றி, முந்தியங்குறையும் பூவராகனுமே முறைதனைக் கேட்டருள் செய்யாச், சிநதையாய் நின்றான் சேர்கறை மிடற்றான் றிருவருள் மேம்படப்புரிந்தான், விந்தையுாமதனை விளம்புவோமென்று வேடுவ முனிவனும் விரித்தான். (கந)

முந்திய யுகத்தி னிருதராயிருவர் வில்வலன் றுணைவன்வாதாபி, விந்தையாமி ருவரிங்குளாரவரோ வீரமும்மாயமும் மிக்கார், தொந்தமாம்பாவம் தொலைத்திடும் வாரணசியின் வழிகளிற் றெக்கார், சுந்தரமான யாத்திரையோர்கள் சோறுணும் மடமெனத் தொடுத்தான். (கச)

வந்தவர்தம்மை வகையுட னழைத்து வழங்குவான் கறிகளோடன்னம், பந்தியில் யாரும்முண்டபின்னந்தகக்றிவகையமிசமாமவனைத், தொந்தமாய்விஞ்சைத்துணிவினுல் லழைக்க வுண்டோர் வயற்றி னின்றுடனே, வந்துரங் கிழித்துவாவெனச்சொ லுமுன் வருவன் வாதாபியென்பவனே. (கரு)

இப்படியாக விருவரும் வழியி லெவரையுந் தீங்குசெய் திருநதார், மைப்படு கும்பமுனிவனு மதுவேமார்க்கமென்றவ்வி டம் வந்தான். தப்பிலாமுனிக்குத்தக்கநல்விருந்துதந்துபின் றம் பியைக்கூவ, ஒப்பிலாமுனிவ ஞோ்நதிதை யொழிக்கவுன்னி யே சீரண மென்றான். (கசு)

மட்டிலான் சொன்ன மாற்றமுன் னவனும் மறலிதன்னுல கி டைப்புக்கான், விட்டிடாத்துணை வன் வெருதுயருழநது வேண் டிநன்முனிவனை வெருவாய்ப் பட்டதுபாவம்போக்கமுன்செய்து பாழ்வினையொழிநதது வேண்டி, இட்டமாய் வேள்வி யியற்று வேனதற்குக் காவல்நீயிருவென விசைநதான் (கஎ)

கொட்டமாயிநக்கு மசுரர்வாழ் நாளுந் கொடும்பசித் தீயி னுலொழிந்தான், கட்டமாமிவனைக் கடததலை நினைத்து கண்ணு தலவனை யேகருதிச், சட்டமாய்வேள்விசமைததனனுங்குச்சர்ச் சனர்வநதவர்க்கெதிராய், இட்டமாம் வரமீந்தன மென்றனனநத வில்வலன் முனிவனுயிருநதான். (கஅ)

அப்பொழுதஙகே வகத்தியர்மலையமைந்தவன்பேரகத்தி ஈன், செப்பிடும் முறைப்பேரருள்செய்பூரணி தான் சேயழு வத னையேகேட்டுத், தபபிலாதவனுய்த தனியனுய்த் துயரந்தாஙகிட வசமிலாதவனுய், இபபுவனத்திற் கிறைவனுய்ப் பின்னுஞ்சிறுவ னுய்யிருந்ததை யோர்ந்தான். (கசு)

அய்யனே யிங்கு வழுகுரல் யாரோ வஞ்சலென்றவனே நீய ளிப்பாய், துய்யனே யென்றுதூய வளுரைத்தாள் அர்க்கையை வென்றகாலோனும், கொய்யுநற்காலுங கமழுங்கூடிடவே குறு கினேர்வளர்ந்ததக்குறைமே, அய்யனுமெழுநதே யரனடி பணிந தே யண்ணலைப் பாடினனநதம். (உ௦)

விண்ணவர்மலரின் மாரி விட்டிறைத்தார் வீணையை நார தன்றொடுத்தான், பண்முறை முனிவர் மங்களமறைந்தார் பல்லி யந்து வைத்தனர்பலகாற், கண்ணனுமயனுஞ் சுரரொடுவிண்ணு கண்டலன் முதலியோர் வந்தார், கண்ணுதலோனுங் கருணை செய் தளித்தான் காவலனிதனையே காணன். (உக)

புதுமையைக்கேட்ட புகழ் நரேந்திரனும் புகழ்மகன்றன்னையேபுல்லிச், சதிசெயும்மனைவைக்கொலைசெயும்படியாய்ச் சாற்றினன்சகலமும்மறிந்தான், விதுவணிபரமன் விரும்பிவாழ்கோவில் விழைவுடன்றேடி வந்தடைந்து, அதிலுள கோவிலனைத்தையும் புதுக்கியமருடன் றிருவிழாவமைத்தான். (௨௨)

நண்டதற் கருள்செய் நாதனல்லருளா ளூட்டினிற் றன்புமுற்றோர்க, ளெண்டிசை யுள்ளோரிங்கு வந்தமர்ந்தேகவெழினதிமூழ்கியே யென்னைக், கண்டுமை யோடுங் கருக்கிலி லிருத்திக் கைதொழு முனிவனைக் காணிற், பண்டுள குறைபோய்ப் பரகதியடைவார் பாரெனப் பரமனும் பகர்ந்தான். (௨௩)

கண்டிலஞ் சிலநாட் கான்கொணர்ந்தேனும் கக்கதற்பணந்திணைலேனுமை, கொண்டதிலமுது கொடுத்திடிலொருவர் கொள்வதேயாயிரத்ததிகம், விண்டருமமரருலகமேத்திடுவர் மேன்மைகொள் விமலனபாலடைவார், பண்டுபோலகாலுங் கைகளுங் கண்டபாலனைப்பட்டணருநே சேர்ந்தே. (௨௪)

சத்தியன்னிமைய சற்குணன்றேபே சற்புத்ர சிகாமணிநீயே இத்தலமாக செய்கென விடுத்தே யிறையுமே நான் றவமுற்றுஞத்தமதலத்தின் பெருமைகளெல்லா முணரவே புபத்திதனந்து வித்தவே யெருமவிளம்பினுமென்று விரித்தனர்புராணிகர் விளங்க. (௨௫)

திருக்காந்துறைப்படலமுற்றிற்று.

ஆக செய்யுள் ௲௮௨

---

## உபந்நியாசப்படலம்.

படித்திடுந் தலங்களெவையும் பாரிற் பகரினும் புனிதமென்றுரைக்கு, மடுத்தவை யன்பு வைத்தரன் பணியை யழகதாய்ச் செய்வரேயானால், கொடுத்திடும் பலன்கள் யாதுநீ ரதனைக் கோவையாய்க் கூறென வவனு, மெடுத்ததின் பெருமை யியம்புவேன்

வேறு.

மிக்கவெட்டொடு மெட்டெனுங் கலையினை விரிவாய்
தக்கு மிம்மொழித் தரணிபா லெவர்களு மறியச்
சிக்குதற்பய னெவற்றையுஞ் சிந்திடா தெடுத்துப்
பக்குவத்துட னுரைத்தன னுள்ளத்திற் பதிய. (௨)

ஆன தாலதை யறிந்ததைக் கேட்டதை யளவாச்
சேனை சூழ்புவிக் கரசெனச் செப்புவே னுனக்கு
கான மூந்துறு மாதியாந் துறைதனைக் கண்டு
தான மேசெய வாதியிச் சுரன்பதந் தாமே. (௩)

பெருத்தெ ழுந்திடும் பெரும்பொரு ளளித்திடும் பிசகாக்
கருத்தி லூற்றிடு வருத்தமுங் கடத்திடுங் கனவில்
உருத்திடு முள மருட்டினை யொருநொடி யோட்டும்
வருத்த வைம்புலன் வாடிவந் தவர்க்கவை வாங்கும். (௪)

பின்பு ரைத்திடு மாலயன் றுறை பெரும் பேற்றை
யன்பு றத்தரும் வலிமையு மேவிடு மகத்தோர்
தன்ப லத்தையுங் கொடுத்திடுந் தரணிசெய் வினையை
முன்ப கற்றிடில் மோக்ஷமு முடிவினிற் கொடுக்கும். (௫)

நல்ல மான்றுறை தலத்தையே நாடிநின் றவர்க்குச்
சொல்லு நாரியுஞ் சுதருடன் வாழ்வுசுத் தமுமே
எல்லை யில்லுறுங் கள்வரு மவனிட மெய்தார்
மல்ல லம்புவி மன்னவ மனத்தினில் கொள்ளே. (௬)

தந்தை தாய்தருஞ் சாபமுந் தன்னைவிட் டோடு
நிந்தை யென்பது நெடுநிலத் திருந்திடா தொழியும்
முந்தை யோர்தம் பங்கின்மேற் பங்குகொண் முரணும்
புந்தி நேருறும் பிழைகளை விரைவினிற் போக்கும். (௭)

கஷ்ட நீக்கிடுங் கருதிய தளித்திடுங் காயக்
குஷ்ட நீக்கிடுங் கோகுலப் பதவியுங் கொடுக்குஞ்
சிஷ்ட ராமுனி வசிட்டன்றன் றுறையினைச் சேர்ந்தால்
இஷ்ட மாப்பலன் மாநிலத் தடைகுவனினிதே. (௮)

காட்டு மித்தலங் கருதிய நூலறி வனைத்து
மீட்டு மிச்சையு மிறையவன் பதவியு மீயும்

மீட்டு நால்வகைச் சேனையு மேதினி முழுதும்
கூட்டி வைத்திடுங் குறுகிடி லவ்வரத் துறையே. (௯)

அன்றி யூக்கம தளித்திடு மாம்பல னெல்லா
மொன்று கூடிடு முளம்புறம் போடிடா துறையுங்
குன்றெ னும் புயமற்றதிற் குறைகெடுங் குணமாம்
வென்றி யில்லவ னிருப்பினு நினைப்பினும் விறலாம். (௧0)

திருக் கரந்துறை யுறுபிணி யனைத்தையுந் தீர்க்கும்
பெருக்கும் வித்தையும் பெருகும் விஞ்ஞானமும் பிறங்கும்
செருக்குந் தீயவை யனைத்தையும் போக்குறுஞ் செல்வ
வருக்க மியாவையு மளித்திடுங் கடைத்துறை மன்னு. (௧௧)

விண்டவித்துறை யேழுமே முறைமையின் விழையக்
கொண்ட விட்டுறுங் குறிகளென் றளந்தனிற்கோடி
விண்டு மார்க்கத்தைத் துறையென விளம்பினர் விழைவாய்க்
கண்டு கொண்டவர் வீடதைக் காணுவார் கருதில். (௧௨)

அன்னமா மடஞ் சத்திர மாலயஞ் சமைத்தோர்
சொன்ன கோபுர யேரிசூழ் பொய்கையே தடாகம்
பன்னும் வேதநற் பாடசாலைம்முதற் பலவு
முன்னி யாக்கினோ ரடைகுவர் முடிவினன் மோக்கம். (௧௩)

வேறு.

என்று மாதவ னியம்பலு மெழின்மிகு திரிபுவனன் றான்
துன்று மாலயந் திருமதிற் சூழுறைத் தேவர்தங்கோயி
லென்று கூவலுல் வீதிக ளுயர்தரு பூமலர்ச் சோலை
யென்று நாடக மண்டப நளிபுனற் றடமெலா மமைத்தே. (௧௪)

வேறு

நித்தியம் பூசை குறைவிலா திருக்க நிவேதனமமுதுநல்லெ
ண்ணே, சத்திய விளக்கோ டுள்ள வாகனமுஞ் சாத்திடு ரதமு
த லிவையும், எத்தல மேனு மிணையிலை யென்ன வேழ் பிரகார
முமெழிலாய்த்,தத்தமாயிவைக ளடைபெறு வதற்காச் சாச்வத
பூமியும் விட்டே. (௧௫)

வேறு.

காடுக ளழித்துப் போக்கிக் கனத்த பட்டணமாச் செய்தே
பீடுறும் பிழைகள் பார்க்கப் பெருமதி காரி வைத்தே
நாடுமென்னகர மேக நல்விடை தருவீ ரென்றான்
வீடுநீ சேர வின்னே வேந்தனே யேகுகென்றான். (௧௬)

சொந்தமா மூருக் கேகிச் சூழ்புவி யரசு செய்து
வந்தவவ் வரசன் றானும் வழிவழி குலத்தோர்க் கெல்லாம்
அந்தமேவ் துறைக் குந்தானே வாதிக்கம் பதிவு செய்தே
சிந்தனை செய்து வந்தான் செகத்துளோ ராருங்காண. (௧௭)

உபந்நியாசப்படலம் முற்றிற்று.

---

ஆரத்துறை நாதன்வாழி யடியார்க ளாரும் வாழி
நிரத்துறை யேழும்வாழி நேர்ந்துறை யுற்றார் வாழி
விரித்ததை யுரைத்தார் வாழி வேந்தன்மா மறைகள் வாழி
தரித்ததைப் பார்ப்போர் வாழி சகலமும் வாழியாமே. (௧)

தேவர்கள் யாரும் வாழி திருநீறஞ்செழுத்தும் வாழி
மூவரும் வாழி பின்னு முத்தமிழ் நூலும் வாழி
யாவரும் வாழி யிந்தவரத்துறைப்புராணஞ் சொன்ன
பாவலர் கற்றோர் கேட்டோ ரெழுதினோர் படித்தோர் வாழி. ()

---

திருவரத்துறைப்புராணம் முற்றிற்று,
ஆக படலம் ௨0.க்கு கூடிய செய்யுள் ௩௬௬.



# திருவாத்துறைபுராணம் பிழைதிருத்தம்,

| விபரம் | பக்கம் | பாட்டு | அடி | பிழையுள்ளது | பிழையில்லாதது |
|---|---|---|---|---|---|
| மூர்த்திவிசேடம் | 9 | 2 | 4 | சிவனையல்லாற் | சிவனையல்லாத் |
| முன்னோர்பாடல் | 7 | 2 | 3 | ராகபத்தவ | ராகயத்தவ |
| | ஷை | 3 | 4 | விரும்வீ | விரும்பி |
| நாட்டுப்படலம் | 9 | 4 | 4 | காயத்தின் | ராகாயத்தின் |
| | 10 | 9 | 1 | சேடிமாரின் | சேடிமாதின் |
| | 15 | 6 | 1 | வதர | வராகனை |
| | 33 | 17 | 1 | பேசிரவிப்பிறவை | பேசியரவியாஸ் |
| | 35 | 11 | 2 | பையமது | வையமது |
| | 44 | 8 | 2 | சேறுன் | சென்றுன் |
| | 52 | 27 | 2 | சமனை | நமனை |
| | 57 | 10 | 4 | வறுத்தீந்தாள் | அவிற்றீந்தான் |
| | 59 | 19 | 4 | வாதாதி | கருதாதி |
| | ஷை | 21 | ஷை | குறைன் | குறைகள் |

உ

ஓம்.

திருச்சிற்றம்பலம்.

# திருநெல்வாயிலரத்துறை என்றுவழங்கும் திருவரத்துறைநாதசதகம்.

---

இஃது

ஷை திருவரத்துறைவாசியாகிய

சோதிஷம்

காண்டீர்

ஆரங்காசாரி யெனவழங்கும்

றெங்கசாமி அய்யங்காரவர்களால்

இயற்றப்பட்டு

ஷைஸ்தலம் திருப்பணி

சீர்காழி- ம-ஸ்ரீ அம்மையப்பபிள்ளையவர்கள்

பொருளுதவியைக்கொண்டு

ஷை றெங்கசாமிஅய்யங்காரவர்களால்

சிதம்பரம்

C. S. சதாசிவம்பிள்ளையினுடைய

சண்முகசுந்தரவிலாச அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

---

இதன் விலை அணா ௪.

1911௵ மே௴ 7௳.

---

உ

ஓம்கணேசாயநம:

# திருவரத்துறைநாத சதகம்.

## காப்பு.

திங்கள்சிரமிருத்துந்தேவன்றிருவருளாற்
சங்கவரத்துறையான்றன்சதகம்—அங்கமுறப்
பாடுதற்குவந்துதவும்பார்வதியாரீன்றவொற்றைக்
கோடுடையானென்றுதியைக்கொண்டு.

## சிவபக்தர்கள்.

பூவுலகிலகத்தியன்சண்டீசனச்சுதன்புலியாண்டபாணாசுரன்
பொறுமையில் துர்வாசன் புனிதமார்க் கண்டனும்புகழுற்றநந்தீ
சனுங், காவலரு பிருகுவுங் கண்ணுவன் மரீசியுங் காணுமாணுப
மன்யுவும், காசில்சீர்த்ததீசியுடன் கவுதமமுனிவருங்காணுபதின்
மூவோரையும், ஆவினிவரம்புமதி யணிகின்ற வண்ணலுக்கான
சிவபக்தரென்பா, ரவருமவ்வப்பரொடு சம்பந்தர்சுந்தரர்மாணி
க்கவாசகருமவர், பாவரையுந் துதிசெயினனுதினம் பாவமுமனு
கமனீங்குமதனால், அகத்தினிடை யகலாமல் நிறுத்திவையனு
தின மரத்துறைப்பதி நாதனே. (க)

## விஷ்ணுபாகவதர்கள்.

பேருலகில் நாரதன் பராசரன் பிரகலாதன் பிழையற்ற புண்டரீகன்
பீடுசொல் வியாசமுனி சுகனம்பரீஷனொடு பின்னருருமநற் பீஷ்மனே
சீருலவு சனகன்னுருக்கு மாங்கதன் விஜயன்செய்யதா ல்பியரிஷியுமே [ன்
செப்புமாவலி யனுமன் விபீஷணச்சிரஞ்சீவி, செகமேத்து வசிஷ்டனுத்தா
பாருணவுதான்கொண்டமாயவர்க்கமைந்திட்டபக்தரென்றிவரையறைவார்
பாரதனிலிவர்பெயர் பண்போடு துதித்திடில் பரிசுத்தனெ மெய்துமே
ஆரணியு மண்ணலே யனுதினந் துதிசெய வறிந்துகொள் ளவனிமீதி
லகத்தினிடை யகலாமல் நிறுத்திவையனுதினம்அரத்துறைப்பதிநாதனே

## ஒவ்வொருவர்க்கோவ்வோர்சமர்த்து.

பூவுலகிலுதித்த வரிலொருவர்பேசிடவல்லர் புதிதொருவர் பாடவல்லார்.
புகழ்கின்ற விசையோடுபடித்திடுவரேயொருவர்புதியநன்னூலையெல்லாம்

நாவுறுதல்வாணியென நற்பயன்சொல்லிடுவர் நல்லமுத்தெழுத்தாகவே
நானிலத்தெழுதிடுவர் நல்விகடகவி யனுய்நாட்டினி லொருவனுவன்
காவேறுதருவென்னகாரென்னவீந்தொருவன்காசினியிலிசைபெருகுவான்
காத்தாலும்பலநாளுங்கடைசியிலில்லையெனுங்கடுஞ்செட்டனொருவனுவான்
ஆவல்கொள்ளவரவர்க்கோரொருசமர்த்தன்றியனைத்துமேவாராதுகாண்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே (௫)

## ஈதலின் பெருமை

யாரேனு மூலகுதனிலறமாக வீட்டுபொருளானதை விருத்திசெய்து
ஆடைநன் பூஷணமறுசுவை யுண்டியுமானபின் னதிகரித்தால்
மாரியதுமறுமையில் லதுவக் கதவிடுமோர்க்க முண்டதனையோசி
மாணிடர்தனக்குவெகுவட்டிக்கேயீவதிலுமாப்பொன்னுமனந்தமாகும்
வராததற்குவமை வந்திறந்தோர்க்கீயில் வழங்குவாரொன்றனந்தம்
வருதமரினுள்ளோர்கள் வறுமைக்கிடங்கொடார் வந்தீவர்யாசகருமே
ஆரோடுபணிமதி யணிந்திடு மண்ணலை யறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (௬)

## உத்தமமான வகை மூன்று.

உலகுதனிலுதித்தவர் களெவராயினுந் தருமவழியினலுற்றபொருளை
ஓங்குமுக்குற்றமுந் தீங்கென்றொழித்திட்ட வுயர்மறை தவத்தோரிடம்
விலகிடவேதன்குறை விரித்தேத்தியீவது விளங்குமுதற்றனமென்பார்
வேண்டிவருமதிதி பரதேசிவிழியுணர்விலார்விரலிலார்முடவர்க்குமே
செலவுசெய்தளித்திடுதல் மத்திமமாகுமாஞ் செப்பிடேனுமதமதானந்
சேரரிவைகைமாறுகண்டேட்ட டம்பமாஞ்சேரச் சகாரணத்தால்
அலையுமதியுடையோனு மளிக்கிலது வீணதாமன்பர்க்கு மன்புசெய்வாய்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (௭)

## தானபாத்திர பலன் விதி.

தீதிலாப்பொருளதனை யாவர்கருமீவதுதெரிவைவிண்மாரிபோலாங்
தேருநீயதில்பேதமழைத்துளியினல்வருந்தேயாதசிப்பிமுத்து
கோதிலாக்கற்பூரங் கதலியிடைவந்திடுங் கொடுவிடநாகமமையுங்
குறித்தகடலதிலுப்பு பாலாழியிற்பாலுகொள்ளுசெம்மண்ணில்சேப்பாம்
ஈதெலாமழைத்துளியின் காரணம்வருகினு மெழில்வஸ்து பேதமாகும்
ஈகின்றதானபலன் பாத்திரப்படியமையுமெவருக்களிக்கினுந்தான்
ஆதலாலதிர்தீயுமவனடைவன்குணபலன்னைவர்க்குமாதாரமாம்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே, (௮)

## ஓர்குணத்தின லுத்தமகுணங்கள் போய்விடும்.

உலகதனிலுதித்திடுமானிடர்க்கிரண்டுகையதிலிட துகைப்பெருமையோம
ஒங்கிவருமெதிரியின்குடுமிகைப்பற்றிடுமோதுபரிதனைநடத்தும்
பெலமாசர்பேட்டிக்குமுன்பேசியாசிசொலும்பெசிடுஞ்சூதுமுதலாய
பேருள்ளகளவுவகையதனில்பின்னின்றிடும்பேதைமைப்புத்தியதனால்
கலைதெறியுங்கவிவாணர்மற்றவர்தமக்குமேகருதிக்கொடுப்பதிலையாற்
காசினியிற்சவுசாதிகாரமுனக்கென்றுதான்கழறினர்பேரியோர்களே
அலியெனினுமாருக்குமீவதேபெரும்பயனறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (எ)

## யாசகனிலக்கணம்.

[கவே
தாரணியில் மானிடர்கள்தனக்கில்லையெனநொந்து தாமொருவரைக்கேட்
தானினைந்திடுபோதுதாழ்ந்திடுஞ்சாஞென்றுதருமவனைக்காணவேகில்
சீரிலாததிற்பின்னுஞ்செப்புசாண்குறைவதாஞ்சேருமவனூர்சென்றிடில் [ம
சிறப்பன்றிசாணதில்குறைவதாஞ்செல்வனகஞ்சேரிலதில்சாண் குறைவதா
ஏர்பிரபுசமயத்தைக்வினவில்சாண்குறைவதாமெழில்முகந்தானோக்கினால்
இருந்ததில்சாண்குறையுமில்லையீயென்பதிலெண்சாணுமொருசாணதாம்
ஆர்பெரும்பரமனையன்போடிதுநிசயமறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (அ)

## இதுவுமது

பார்க்கின்றபூளையினறபமாம்பஞ்சுவதிற்பகருயாசகனற்பமாம் [டான்
பறக்காதிருப்பதேதன்காலின்முன்னவனெனில்பகர்வாதாரஞானேன் [விட்
ஏர்க்கின்றவர்க்குமுன்னெதிர்ப்படற்கேழ்பயனொனவெண்ணியேயொதுங்கி
ளதேனுமில்லையெனஏற்பவர்க்கிசைந்திடி லிசைபெருமைதானகலுமே
கார்க்கின்றகாசினியில்கனலோபய குமேகருதிநோக்கியாவிடில் [ம்
காட்டினிடைசன்னியாசிதண்டுதநம்போலவேகழன்றிடுஞ் செல்வமெல்லா
ஆர்க்கின்றவப்புவணியப்பனைப்போற்றிடவறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (கூ)

## சோடசமஹாதானம் 16 அறிய.

நாகமதுகுதிரைபெண்சுலமானசுவர்ணமும்நற்கம்பளம்வீடுதான்
நாடறியவுழையாடுநற்கபிலைகன்றுடன்நயசகடம்நன்பகடுதான்
தாகமொடுபூமியுந்தயவாருநாங்குலந்தாழாதகால்சிங்கரம்
தக்கவுயர்துலாப்பாரந்தலைபணைமெத்தையுந்தருதானம்பதினாறுதான்
பாசமுடனிதனையேயுவகையாலீவோர்கள்பராரஜர்கொண்டாடவே
பகரில்வெகுகீர்த்தியுடன்பாராளுமன்னராய்ப்பரமனுக்கன்பரவோர்

